உ
மகாகணபதி துணை

# திருவருள் அயோத்தி மாலை





நூலாசிரியர் :
கோயிலூர் மரபு
**பிரம்மஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்**
198, சாத்தார வீதி, ஸ்ரீரங்கம்.
திருச்சி-6.

பவானி குமாரபாளையம்,
**ஜே. கே. கே. முனிராஜா**
அவர்களால் வெளியிடப்பெற்றது.






ஸ்ரீ ராம ஜெயம்

# திருவருள் அயோத்தி மாலை

## முன்னுரை

உலகின்கண் மக்களாய் பிறந்தவர்கள் விரும்புவது சுகம். அந்த சுகத்தைத் தருவது தவம், ஜெபம், தானம், யாகம் ஜீவ காருண்யம், ஈசுரபக்தி முதலியனவாம். இதனால்தற்சமயம் துக்க நீக்கமும் சுகஅடைவும் உண்டாம். ஏனெனில் சரீரமுள்ளவரை துக்கமுண்டு. பாப புண்ணிய கர்மங்கலுள்ளவரை சரீரமுண்டு. பிரவிருத்தியுள்ளவரை பாப புண்ணியமுண்டு. விருப்பு வெறுப்புள்ளவரை பிரவிருத்தியுண்டு. அனுகூலப் பிரதிகூல ஞானமுள்ளவரை விருப்பு வெறுப்புண்டு. தனக்கு வேறாக சீவேசுர ஜெகத்திருக்கும்வரை அனுகூலப் பிரதிகூல ஞானமுண்டாம். தன்னை பிரம்மரூபமாக அறியாதவரை அஞ்ஞானமுண்டு. இந்த அஞ்ஞான நிவர்த்தியானல் சர்வதுக்க நிவர்த்திப் பரமானந்த பிராப்தியாகிய மோட்சமுண்டாம். இதற்கு ஈசுர கிருபை, குரு கிருபை, சாஸ்திர கிருபை, அந்தக்கரணகிருபை வேண்டும். ஏனெனில் தூலசரீரத்தில் வாதபித்த சிலோத்துமம் இருப்பது போல சூட்சும சரீரத்தில் மலம், விட்சேபம், ஆபரணம், முத் தோஷங்களுண்டாம். இதில் நிஷ்காம கர்மஉபாசனை செய்தால் மனத்திலுள்ள பாவமும்சலனமும் நீங்குவதாம். அதனால் மனத்தில் சத்த சத்துக்களின் விவேகமும் இகபர விஷயங்களில் வெறுப்பும், சமாதி, சட்சம்பத்தியும், முமுட்சுத்வமும் ஆகிய நான்கு சாதனங்களுண்டாம். அதனால் குருலாபம். அதனால் சிரவணமனன நிதித்தியாசனமும் அதனால் தத்துவம் பதார்த்த சோதனமும் அதனால்குருஉபதேசமும் அதனால்அஞ்ஞானநிவர்த்தியும் தத்துவ ஞானமும் உண்டாம். இதற்கு ஈசுரபக்தியே முக்கிய சாதனமாகும். ஈசுரனை பூரணமாக சரணடைந்தவனுக்கு தாய் தனது குழந்தைக்கு வேண்டுங்காலத்தில் வேண்டுவதையெல்லாம் கொடுத்து வளர்ப்பதுபோல் பரமேஸ்வரன் தனது

பக்தனுக்கு தாயைவிட பன்மடங்கு சிறந்த முறையில் எந்த எந்த காலத்தில் என்னென்ன செய்ய வேண்டுமென்பதைத் தெரிந்தவன், தடையின்றிச் செய்யும் பெருமையையுடையவன் என்பதை பகவற் கீதையில்- 9. அ. 22. சு. கூறியதை என்னிடத்தில் எவ்வளவோ காட்டியிருக்கிருர். அதை எல்லாம் எழுதினுல் விரியுமென விடுத்தனம். இந்த அயோத்தி மாலேயை எழுத ஆரம்பித்து பலவருடங்களாக பலமுறை எழுதினேம். எம்பெருமானுக்கு அச்சியற்ற திருவுளம் இல்லே போலுமென நினேத்த மாத்திரத்தில் குமாரபாளேயம் கொடை வள்ளல் ஜே. கே. கே. முனிராஜா அவர்களிடம் சொன்னவுடன் அந்த பாக்கியம் எனக்கிருக்கட்டும் என அச்சுவாகனம் ஏற்றுவித்தார். இந்த நூலில் இராமயண வரலாறும் பக்தி, ஞானம், ஒழுக்கம் முதலியவற்றை சுருக்கமாக காட்டியிருக்கிரேம். இதனே வேதாகமங்கள் விரிவாகக்கூறு ம் புராண இதிகாசங்களில் ஈசுவராதி அவதாரங்களால் நடந்து காட்டியதாகும். மனிதப் பிறவியின் அருமை தெரிந்த மக்கள் ஆணுயினும் பெண்ணுயினும் விடா முயற்சியால் மரணமிலாப் பெருவாழ்வு பெறலாம். அற்ப சுகத்தை பெரிதாகக் கருதி அழிந்து போன மக்கள் அளவில்லே. பரத கண்டத்தில் இந்து மதத்தில் மக்களாக பிறந்த நாம் அடைய வேண்டிய தத்துவஞானத்தை அடையவில்லே என்ருல் நமக்கு நாமே தீமை செய்வதாகும். அதனுல் எளிய முறையில் எழுதிய இந்த நூலில் உள்ள விஷயங்களேத் தெரிந்து மோட்ச, சாம்ராஜ்யம் பெறுவீர்களென்று பரமேஸ்வரனேப் பிரார்த்திக்கின்றேன்.

198, சாத்தார வீதி,
ஸ்ரீரங்கம்,
திருச்சி-620 006.

இங்ஙனம்,

**பிரஹ்மானந்த சுவாமிகள்**

---

18-5

## வாழ்த்துரை

ஸ்ரீரங்கம் தவத்திரு பிரம்மானந்த சுவாமிகள் எழுசீர் விருத்தங்களில் அமைத்த நூறு பாடல்களை அயோத்திமாலை யென்றபெயரிட்டு ஒரு நூலாக இயற்றியுள்ளார்கள். மேற்படி நூல் உருவில் சிறிதாக இருந்தாலும் அதை இராமாயணசாரம் என்று சொன்னால் மிகையாகாது. இராம பக்தர்களுக்கு மட்டுமல்லாமல் எல்லோருக்கும் பலன்தரக்கூடிய இந் நூலை பக்த மஹாஜனங்கள் வாங்கிப் படித்து பயனடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். குருவருள் துணை நிற்க. ஓம்.

இங்ஙனம்

**தேஜோமயானந்த சுவாமிகள்**

சதாசிவ பிரம்மேந்திராள்

அதிஷ்டானம், நெரூர்.

---

# அணிந்துரை

சக்கர வர்த்தி திருமக னேகின்
சற்குண மாட்சிமை முற்றும்
மக்களெல் லோரும் மகிழ்ந்துணர்ந் துய்ய
வான்மீகி மாமுனி போல
மிக்குயர் பிருமா னந்தராம் அடிகள்
மென்மையார் செந்தமிழ் சொல்லால்
அக்கரை யுடனே அழகுறத் தொடுத்த
அயோத்திநன் மாலையை அணிவாய்.

அருளெனும் ஒளியால் ஆரிய குலத்தில்
அழகினை யூட்டிய சுடரே
இருளிடை மயங்கி மனந்தடுமாறும்
எங்களுக் கின்னருள் கிடைக்கப்
பொருளிடை நிற்கும் மெய்ப்பொருள் காட்டிப்
புத்தியில் பக்தியை யூட்டி
மருளினை மாற்ற மாமுனி படைத்த
அயோத்திநன் மாலையை அணிவாய்.

உற்றிடு கின்ற உயிர்க்கெல்லாம் இனியாய்
உன்னெழில் திருவடி மலரைப்
பற்றிய முனிவர் வேட்டுவர் அரக்கர்
பறவைகள் குரங்குகள் கரடி
பெற்ற பேரின்ப உணர்வினை யாமும்
பெற்றிட மாபெரும் முனிவர்
வற்றிடா அருளால் மகிழ்வுடன் வழங்கும்
அயோத்திநன் மாலையை அணிவாய்.

சத்திசரண்

K. **நரசிம்மன்**, ஸ்ரீரங்கம்.

---

18-5

உ

ஸ்ரீ ராம ஜெயம்

# திருவருள் அயோத்தி மாலை

## காப்பு

உலகில் திருவருளை யோர்ந்துமிகப் பாடப்
பலகலையும் தந்தெனக்குப் பண்பாய்—நலமெல்லாம்
பொங்கி வழிகின்ற பொன் சித்திமா முகன்றன்
துங்கத் திருத்தாள் துணை.

## நூல்

திருவருள் பெற்ற சீலமெய் யடியார்
தேடருங் கவிகளா லுன்றன்
பெரும்புகழ்ப் பாடிப் பிரம்மவா னந்தம்
பெற்றினி திருக்கயான் கண்டு
திருமகள் மார்பா தீயனேன் உன்றன்
திருப்புகழ் பாடவும் துணிந்தேன்
அருமறை முடியில் அமர்ந்தொளிர் மணியே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 1

வந்தெமன் உயிரை வருத்துதற் கெண்ணி
வருமுனம் எம்பிரான் அறிந்தே
வந்துநீ யஞ்சேல் வந்தனன் என்று
வாயுரை வழங்குநா ளுளதோ
சந்ததம் ஞானத் தனியர சளித்துச்
சரணடைந் தவர்களுக் கென்றும்
அந்தமில் இன்பம் அருளினல் அளிப்பாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 2

கனிமொழி மாதர் கண்ணெனும் அம்பால்
கருத்தழிந் தறிவிலாக் கடையேன்
தனியிருந் தறியேன் தவமிருந் தறியேன்
தஞ்சமென் றடைந்தவர்க் கருளேன்
இனியுன தருளால் ஏழையான் பிழைக்க
ஈசனே வழியெனக் குளதோ
அனியம்நீ யென்றே அகற்றிடா வண்ணம்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 3

கண்ணிமை போல்நின் அடியரை அருளாள்
காத்திட இன்பவீ டடைந்தார்
எண்ணிலி காலம் இருவினை வயத்தால்
இறப்பொடு பிறப்படைந் தயர்ந்தேன்
புண்ணிய வயத்தாற் புருடனுய்ப் பிறந்தேன்
போற்றியுன் திருவடி யடைந்தேன்
அண்ணலே யுன்றன் திருவுளத் திரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 4

ஆர்த்தெழக் கடலை யசுரரும் சுரரும்
அமுதெழக் கடைந்தநாள் அசுரர்
பார்த்துனை மயங்கப் பகிர்ந்திலை அமுதம்
பணிந்திடும் அமரருக்கு அளிப்பாய்
தீர்த்தனே அடியார் செல்வமும் வீடும்
திருவடி நிழலென அடைந்தார்
ஆர்த்தனும் வந்துன் அடைக்கலம் புகுந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 5

மூலமென் றழைக்க முதலைவாய் பிளந்து
மும்மதக் களிற்றை யாண்டதுபோல்
காலனாம் முதலைக் கவர்ந்திடா முன்னம்
கருணையால் ஆளுநா ளுளதோ
ஓலமிட் டயர்ந்தேன் உணர்விலா நாயேன்
உய்வதற் கொருவழி காணேன்
ஆலமுண் டவனுக் கருந்துணை யாவாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 6

மெய்ம்மையென் றுலகை விரும்பியான் அலைந்து
வேதனை பலவடைந் தயர்ந்தேன்
நம்மையே காட்டும் ஞானசற் குருவால்
நனவினில் சுழுத்திபெற்றுணர்வால்
பொய்மையென் றுலகை புந்தியா லுணர்ந்து
பூரனா னந்தமே வடிவாய்
அம்மையே யப்பா ஆருயிர்த் தலைவா
அருளெனக் கயோத்தியெம் அரசே. 7

அளிமுரல் அலங்கல் ஆர்இருட் கூந்தல்
அஞ்சுக மொழியினர்க் கயந்தேன்
வளிமுதல் மூன்றின் வழிமுறை யுடலம்
வழிகெட அழிந்திடா முன்னம்
நளினநின் சரணம் நாயினேன் அடைந்து
நைந்துநைந் துருகுநா ளுளதோ
அளியனென் றடைந்தேன் ஐயனே யிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 8

காமுகர் உயிரைக் காலனாய் உண்ணும்
கருங்கணார்க் குருகுமிக் கடையேன்
மாமுனி வேள்வி தாடகை யழிக்க
வந்தநாள் மாய்த்தபோல் மாய்த்து
மாமுகில் வண்ண மாதுரை மார்வா
மாயமென் றைம்புலன் அகற்றல்
ஆமுனக் கரிதோ அடைக்கலம் புகுந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 9

ஐம்பெரும் பூதம் அருக்கனாய் மதியாய்
ஆருயிர் அனைத்துமாய் ஒளிர்வோய்
மைம்முகில் மாதம் மும்முறை பொழிய
மகிழ்ந்தர சாளுமோர் நாளில்
பைம்பொழில் முதலாய் பல்லுயிர் அனைத்தும்
பரகதி யடையநான் இலனே
ஐம்பெரும் தொழிர்க்கும் அரும்பெரும் துணையே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 10

நித்தனே நிமலா நிறைமதி யமுதே
நீதியால் ஆளுமோர் அரசே
முத்தனே முதல்வா முழுமுதற் பொருளே
முடிவிலா இன்பமாம் இறைவா
எத்தனை பிறவி யெடுத்தெடுத் தலுத்தேன்
இரக்கமுற் றென்னையாண் டிலையே
அத்தனே யுனக்கும் ஆவதொன் றிலையோ
அருளெனக் கயோத்தியெம் அரசே. 11

கற்றவர்க் கருளும் கருணைமா முகிலே
கருதுவார்க் கின்பமாம் மலையே
மற்றவர் அறியா மனமணி விளக்கே
மதியிலா நாயினேன் உய்ய
குற்றமொன் றறியாய் குறுமணல் சோற்றில்
கூறவே நிலதுபோல் யானும்
அற்றவர்க் கருளும் அகில நாயகனே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 12

நாமகள் இன்னும் நவின்றிடா அறிவே
நரவடி வெடுத்திடல் என்கோ
பூமகள் மகிழப் பொருந்திய வயோத்திப்
புரமுறு புண்ணிய மென்கோ
கோமகற் கரசன் கோசலை பெற்ற
குறைவிலா நிறைதவம் என்கோ
ஆமறை முடியில் அமர்ந்தொளிர் மணியே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 13

தந்தை சொற்படியே தவவனம் புகுந்தாய்
தரணிவாழ் விடரெனக் காட்டி
எந்தைநீ யிருந்த இடமெலாம் அயோத்தி
ஏத்துவார்க் கின்பமாய் நிறைந்தாய்
சிந்தையிற் ஞானந் திடப்பெற அளித்துத்
தீரனாய் எவ்விடத் திருந்தும்
அந்தமில் இன்பம் அடியனுக் கிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 14

பிறவியாம் ஆழிப் பெருப்புணே யான
பேரருட் திருவொடும் பொலிய
துறவியாய் ஓடம் தூண்டிய குகன்செய்
சொல்லரும் புண்ணியம் ஏதோ
நறவிழி துளவ நாதனே யுன்றன்
நாட்டமும் பெற்றிலா நாயேன்
அறவியா யருளும் ஐயனே இரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 15

வேடனும் குகனை மெய்யுறத் தழுவி
விரும்பியென் தம்பியென் றழைத்தாய்
வேடமாம் மாயை அவித்தையும் நீக்கி
வேதமா வாக்கியப் பொருளாய்
கூடவே ஒன்றாய் கூடத்தன் பிரம்மம்
குறைவிலாச் சுபாவமாய் இருக்க
ஆடவன் நீயென் ருண்டிலை யென்னே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 16

எங்குமாய் நிறைந்து யாவுமாய் விளங்கும்
இறைவநின் திருவரு ளின்றி
இங்கர சாள எவருமே யில்லை
யென்பதை யுணர்த்திட பரதன்
சிங்கமா தனத்தில் திருவடி வைத்துச்
சேவைசெய் தாளென வைத்தாய்
அங்கமாய் உயிராய் ஆட்டுவிப் பவனே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 17

தன்னிலை யிளந்து சாபத்தால் வந்து
சகலர்க்கும் இடர்தரும் கவந்தன்
இன்னுயிர் போக்கி இன்பமே யளித்தாய்
என்மன அரக்கன்வந் திறைவா
என்னுணர் வழித்தான் எவ்வுல கடைந்தும்
எப்பிறப் படையினும் துயர்செய்
அன்னவர்க் கஞ்சி அபயமென் றடைந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 18

வாசவன் தந்த வரத்தினுல் மறைந்து
வாலிமேல் வாளிவிட் டீனயோ
தாசனுய் வந்தும் அரக்கரை அழிக்கும்
தன்செயல் மறந்தனன் என்றோ
பாசம தறுக்கும் பதநிழல் அடைந்தால்
பாதுகாத் திடவரும் என்ருே
ஆசறு மனத்தால் அறிந்திலன் எனக்கும்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 19

அன்பினுற் சபரி அறுசுவை பார்த்துண்
டளித்தநற் கனியமு துண்டாய்
உன்பெரும் தகவோ உயிர்க்கெல்லாம் உயிராய்
உள்ளநின் பேரருட் பெருக்கோ
தன்பர முத்தித் தனியர சாளத்
தயவினுற் தந்தனை யென்னே
அன்பிலேன் அறியேன் ஐயனே நோக்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 20

நான்மறை யுணர்ந்தோர் நாடரும் அடிகள்
நாதனே மனிதனும் கருணை
கான்செயும் தவமோ கதிதரும் தகவோ
கடுந்துயர் அரக்கர்தம் அழிவோ
தேன்மொழி யன்னைத் திருவொடும் கூடித்
திரிந்தநாள் நாயினேன் உய்ய
ஆன்ம நாயகனே அடைந்திலன் புல்லாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 21

காற்றிறம் காட்ட கல்லைப் பெண்ணுக்கி
கைத்திறம் காட்டிவில் முறித்தாய்
போற்றிரம் காட்டிப் பொன்றிட அரக்கர்
பூமகள் சிறைவிடுத் தாண்டாய்
நூற்றிறம் காட்டி நுண்ணிய அறிவால்
திகர்வினை அழித்துமேல் வீடு
ஆற்றிறம் காட்டி ஐயனே யிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 22

கலைமுழு துணர்ந்த கௌசிக முனிவன்
காத்தருள் வேள்வியென் றடைந்தான்
அலைகடல் துயில்வோன் ஐந்தொழில் தலைவன்
அருளினுல் ஆள்வனென் றறிந்தோ
சிலையொடித் தவையில் சீதையை மணந்து
தேவர்கட் கருளுவா னென்றோ
அலைமனத் தறியேன் ஐயனே நோக்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 23

வேதம்நீ யூழி தோறுவந் தருளும்
விமலனே வசிட்டர்தம் குருவாய்
ஆதனத் திருத்தி அரும்பொருள் வினவல்
அரியமெய்ஞ் ஞானியின் குலத்தில்
பேதம்போய் மூவேழ் பிறப்பறும் ஞானம்
பிறந்திடும் பெருமையை யறிந்தோ
ஆதலால் ஞானம் அடியனேர்க் கிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 24

தஞ்சமென் றுயிர்கள் தவித்திடும் காலம்
தாயென வுந்திதந் தருளும்
அஞ்சன மேனி திருவொடும் பொலிய
ஐந்துவடக் குடில் தவமோ
நெஞ்சைவிட் டகலாய் நீயென துருவாய்
நிலைபெரும் இன்பமா யிருந்தும்
அஞ்சலென் றருளால் ஆண்டிலை யென்னே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 25

தூசகல் குயத்தில் துணைவியைத் கீண்டத்
துரும்புநீ விடுத்துகாக் கசுரன்
ஈசனே முதலாம் எவ்வுல கடைந்தும்
இன்னுயிர் காத்திட அறியான்
பாசம தறுக்கும் பதநிழ லடைந்தே
பார்த்தொரு கண்ணழித் தாண்டாய்
ஆசற மனத்தை அருவமே யாக்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 26

கழலடைந் துன்னைக் கதியெனப் பற்றிக்
கருதுவார் இருவினை களைந்து
உழல்மனம் மாற்றி யுணர்வினுல் இன்ப
வொளிவிளக் கேற்றிவைத் தாள்வாய்
நிழலிலாப் பாலை நிலமெனும் விடய
நெருப்பினுல் வெந்துமுத் தாப
அழலினுக் கஞ்சி அபயமென் றடைந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 27

மலர்மகள் உரையால் மான்பினே போதல்
மக்களின் சுபாசுப வினையோ
உலகினில் மனையாள் உரையினை மறுத்தல்
ஒருவரும் இலையெனும் கருத்தோ
பலபல துயர்செய் பாதக அரக்கர்
பட்டழிந் திடுவரென் றறிந்தோ
அலகிலா ஆடல் ஐயனே யறியேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 28

தீவினை அரக்கன் சீதையை யெடுத்துச்
சென்றபோ தறிந்த நற்சடாயு
தாவிவந் தெதிர்த்து தலைபத்தும் உதிர
தன்னுயிர் நிலையினை மாற்றி
பாவிபொய் கூறி பதைத்திட வீழ்த்த
பார்த்துடற் கர்மமும் செய்தாய்
ஆவியுன் பதமே யடையநீ அருள்வாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 29

சதுர்மறை தேடிச் சாற்றுதற் கேங்கும்
சதுரனே கருணைமா முகிலாய்
புதுமையாய் அருளைப் பொழிந்தநாள் கொடியேன்
போற்றிவந் தடைந்திலன் உய்ய
முதுமையால் உடலம் முறைகெடத் துயரால்
முதல்வனே சகித்திடா தயர்ந்தேன்
அதுலனே எனதார் உயிர்க்கொரு துணையே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 30

பாம்பின் வாய்த்தேரைப் பற்றிய முறைபோல்
பற்றினர் ஐம்புலக் கள்வர்
தேம்பியான் அழுதேன் திக்குவே றின்றிச்
சீதையை அரக்கர்செய் துயர்போல்
பாம்பணைச் செல்வா பார்த்துநீ யிருந்தால்
பாவியேன் உய்வதற்குண்டோ
ஆம்படி யறிந்தே யகில நாயகனே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 31

அணியணி யாய்வந் தாசைமுக் குறும்பர்
ஆருயிர் கவர்ந்திட அயர்ந்தேன்
துணிவுடன் அரக்கன் தூக்கிய செல்வி
துயரம் போல் ஆனது பெருமான்
பணிவுடன் கூவி பதறியான் ஏங்கும்
பாவியேன் துயரறிந் திருந்தால்
அணிதுயில் உரிய ஐவர்பார்த் ததுபோல்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 32

அண்டங்கள் கோடி அளவிலா வுயிராய்
அதுவது வாயிருந்தி லகல்
பண்டநீர் தோறும் பரிதிபோல் தோன்றும்
பரம்பொருள் ஏகமா யிருந்தும்
தொண்டனு யிருந்துன் சொரூப மாயிருந்தும்
தொடர்பிறப் பறுத்திலே யென்னே
அண்டர் நாயகனே அடியனுக் கிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 33

உலகிலென் தந்தை உயர்வென இருவர்
உரைத்திட இளவல்செய் தீர்ப்பு
புலம்பெறும் சனகன் உயர்ந்தவ னென்ன
பூமகள் மலரினுற் பிணித்தாள்
பெலமுறக் கயிற்ருல் பிணித்தன சோதை
பேரன்பாற் சகதேவன் பிணித்தான்
அலமுறும் வினையேன் ஏதினுற் பிணிப்பேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 34

சுக்ரீவன் அனுமான் தோளரா யடைந்தார்
துணைவர்என் தம்பியென் றழைத்தாய்
மிக்கபேரருளை வியந்துவந்தடைந்தேன்
விருப்பமும் நிறைவுறும் என்றே
முக்குணம் கடந்து மோகவே றறுத்து
மோனமெய் ஞான பேரின்ப
அக்கரை சேர்த்துன் அழிவிலாப் பதத்தை
அருளெனக் கயோத்தியெம் அரசே 35

ஊனமில் உடலம் உனதடிக் கடிமை
உயிருன தம்சமாம் உணர்வால்
ஞானமெய் இன்ப நாதனும் என்றும்
நானவ னாகிவே ரின்றி
தேனவ னுகிச் சிந்தையை மறந்து
தெவிட்டிடா தின்பமாய் எனக்கும்
ஆனவன் என்ற அனுமன்பால் அன்பும்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 36

முக்குண மாவாய் மூவரும் ஆவாய்
மூவர்க்கும் முதல்வனு மாவாய்
திக்குகள் ஆவாய் தேவரும் ஆவாய்
சீவரும் ஆய்வினைக் கேற்ற
சொர்க்கமும் ஆவாய் நரகமும் ஆவாய்
சுகந்தரு முத்தியும் ஆவாய்
அக்கரம் ஐந்தும் எட்டுமாய் நிற்பாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 37

எழுமரா மரத்தை யிறைவனே துளைத்தாய்
என்வினை தொலைத்திலை யென்னே
பழுதையிற் கண்ட பாம்பென உலகில்
பலவிதத் துயரதில் மூழ்கி
எழுபிறப் பாழி யெழுந்தலை மோதி
சிறுவினைக் கயிற்றினுற் கட்ட
அழுதழு தேங்கி யபயமென் றழைத்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே.

துளவமார் புடையோய் துந்துமி யெலும்பை
சுக்ரீவன் அசையென நோக்க
இளவல்கால் விரலால் எற்றின னதுபோல்
எனதுவல் வினையினை எற்றி
உளமதில் ஞான வொளிவிளக் கேற்றி
உணர்வுமெய் இன்பவீ டளிப்பாய்
அளவிலாப் புகழோய் அடைக்கலம் புகுந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 39

காயமும் உயிராய் கலந்துநீ நனவில்
கனவுபோய்ச் சுழுத்தியில் சிவ
மாயமாய் நடிக்கும் மாயவன் நீயே
மாயைபே ரொழித்துசற் குருவால்
நீயவ னுகி நித்தியா னந்த
நிலைதெரிந் தனைத்துமா யிருக்கும்
ஆயர்தங் கொழுந்தே அருட்பெருங் கடலே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 40

மருளினுல் மதர்த்தப் பரசுரா மனை நீ
மாதவத் தகந்தையோ டழித்தாய்
இருளினுல் மதர்த்தே ஏழ்பிறப் பாற்றில்
ஏந்திளைச் சுழலிலே சுழன்று
பொருளினுல் மதர்த்துப் புலையனு காமல்
பூரணத் திருவருள் புரிந்துன்
அருளினுல் மதர்த்தே அழிவிலா ஞானம்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 41

★ பகலிடத் திரவாய்ப் பார்த்தனைக் காக்க
பலியிடச் சயிந்தவன் உயிரை
இகலிடத் தாழி யெடுத்தஎம் பெருமான்
⊗ ஏகநாதனுக்கு முன் சென்று
புகலிடம் எனநீ புன்தொழில் இயற்றும்
புண்ணியம் ஏதெனச் சொல்வேன்
அகலிடத் தெனக்கோர் அருந்துணை காணேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 42

---

★ பக்தவிஷய வரலாறு
⊗ பாரத வரலாறு

பாடுநல் வண்டு பனிமலர்க் கூந்தல்
பாவையர்க் குருகுமிப் பதறன்
வீடுபெற் றுய்ய வேதமோர் நான்கும்
விதித்தமெய் யுணர்வினுல் உணர்ந்து
நாடுதற் கறியேன் நாயினேன் வினையால்
நாணிலா தாடுபம் பரம்போல்
ஆடுவேன் இறைவா அறிந்தெனை நோக்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 43

புகழ்ந்துனைப் போற்றும் புண்ணியர்க் கிரங்கி
போதமும் வீடுநீ யளிப்பாய்
★ இகழ்ந்துனை எதிர்த்தார் இறந்துமேல் வீடும்
எய்தினர் எனினும்யான் வேண்டேன்
புகழ்ந்துனைப் போற்றும் புண்ணிய வலியால்
புரணமெய் ஞானவா ளெடுத்து
அகழ்ந்துவல் வினைவே றஞ்ஞனை மாய்த்தே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 44

காவலாய் வேதம் கருணையால் நோக்கிக்
காதலை நீக்குமா றுரைக்கும்
நாவலாய்ப் படித்து நங்கையர்க் குருகும்
நாயினேன் உய்யுமா றுளதோ
ஏவலாய் அறுவர் இன்பமாய் விடய
இச்சைமேல் இச்சையாய் இழுக்க
ஆவலாய் அலைந்தேன் அழிவிலா வுணர்வை
அருளெனக் கயோத்தியெம் அரசே. 45

உம்மையே பாடி யுருகுநம் மாழ்வார்
உயர்வர உயர்நலம் உடையாய்
இம்மையே என்ன இன்பவீ டளித்தாய்
எழில்திரு வாய்மொழி தன்னை
தம்முனை செல்லச் சதுர்மறை தம்பின்
தனித்தனி வரவும்நீ வைத்தாய்
அம்மையே அப்பா ஆருயிர் துணைநீ
அருளெனக் கயோத்தியெம் அரசே. 46

---

★ இராமாயண வரலாறு

பவமெனும் கடலில் அகமெனும் கல்லைப்
பற்றியான் அழிவது முறையோ
துவமெனும் பதமே துரியதற்பதமாய்
துன்பமற்றின்பமே வீடாய்
தவமெனும் துணையால் தற்பதம் பெற்றுத்
தனியர சாளுநா ளுளதோ
அவமுறா தெனையும் அங்கையா லேந்தி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 47

மங்கைமா மன்னன் பாதவம் ஏதோ
வழிப் பறிகொடுத்துநீ அந்நாள்
செங்கழல் காட்டித் திருவருள் புரிந்தாய்
தீயனேன் உளத்தினில் அவித்தைக்
கங்குலில் இச்சை யரவினுல் கடித்து
காதலாம் விடத்தினுல் அயர்ந்தேன்
அங்கையா லேந்தி ஆள்வை யென்றடைக்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 48

மறையுணர் வியாதன் மால்பரம் என்னும்
வாய்மையால் அழிந்தது கால்கை
பறையடித் தரசன் பாண்டியன் மதுரை
ப்பட்டிமண்டபந்தனில் பட்டர்
நிறை கிளியறுத்து நீபரம் எனவே
நின்றனைக்கருடன்மே லென்னில்
அறைவதற் குளதோ அறிவினு லுணர்ந்நே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 49

புரக்குமூ வுலகம் போற்றுநின் கழலைப்
போற்றுதற் கறிவிழா அரக்கன்
குரக்கினம் அழிக்கக்குலத் தொடு மாண்டான்
குறிப்பறிந் தடியினைப் போற்றி
இரக்கமுற் றுயிரின் இருவினை மாய்த்தே
இன்பவீ டடைந்திடா மனித
அரக்கர்போல் உன்றன் அருளிலா நாயேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 50

ஆதவன் ஒளியும் அண்டர்தம் வலியும்
அறிந்திடா திலங்கை போய்ச் செல்வி
வேதனை தீர்த்து மெய்யுரை புகன்று
வினயமாய்மோதிரம் அளித்த
தூதனே நாட்டைத் துரும்புபோ லெரித்தான்
துரியத்தால் எரிந்த தீவினைபோல்
ஆதவன் அருள்சேர் அனுமன்பால் அன்பும்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 51

செல்வியை யரக்கன் சிறையில்வைத்ததுபோல்
★ சிறைவைத்தான் பிரம்மத்தை மனதில்
வல்வினை மோகன் வந்தர சாள
மயங்கின சராசர வுலகம்
கல்வியால் விவேகன் கண்டருட் படையால்
காத்திட மோகனும் படையும்
அல்வினை கூட்டி அஞ்ஞனே டழித்தே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 52

அந்தகர் கூடி யானைகண் டது போல்
அறுமதத் தவர்களும் போற்றி
சிந்தையில் அவர்தம் தெய்வமாய் தோற்றி
திருவருள் புரிந்தநீ யெனக்கும்
சந்ததம் ஞானத் தனியர சாளச்
சாக்கிர சொப்பனம் சுழுத்தி
அந்த மில் துரியம் தானெனக் காட்டி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 53

அஞ்ஞனல் உலகோர் அறிவிலர் ஆசி
அறம்பொருள் இன்பவீ டிளந்தார்
சஞ்சலப் பிறவி தனைய டைந்தயர்ந்தேன்
சகடுபோல் பிறப்பிறப் பதனில்
ஊஞ்சல் போல் சொர்க்க நரக காதி
உழல்வதை கண்டுநான் மயங்கி
அஞ்சலென் றடைந்தேன் ஆள்கரத்தேந்தி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 54

---

★ பிரபோத சந்திரோதயத்தின் கருத்து

பஞ்ச கோசத்தை பழுதையிற் கண்ட
பாம்புபோல் நானெனக் கண்டு
வஞ்சக மனத்தால் மறைத்திட மயங்கி
வாடினேன் திருவருள் புரிந்து
சஞ்சல மாற்றிச் சச்சி தானந்த
தனியர சாளுநாளுளதே
அஞ்ச லென் றடைந்தேன் அருளினுல்நோக்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே· 55

கானலாற் றினிற்போய்க் கடந்தவர் பதின்மர்
காண்கிலர் ஒருவனே யதுபோல்
காணலாம் பிறவிக் கடல்கடந் தருளால்
கதிபெற மனிதனுய்ப் பிறந்து
நானலாப் ⊗ புரியட்டகவுட லாதி
நாடிமெய் யுணர்விலா தயர்ந்தேன்
ஆனதால் குருவாய் ஆள்வையென் றடைந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 56

ஆதனத் திருந்தும் அருந்தவம் புரிந்தும்
அலைகடற் கிறையவன் வாரான்
நாதநின் சிலையில் நாட்டிய சரம் போய்
நடுங்கிவந் தடைக்கலம் புகுந்தான்
பேதசா மம்போய் தண்டமே யன்றி
பேருரை புல்லியர் கேளார்
ஆதலால் மனத்தை அடியொடு மாய்த்தே
அருளெனக் கயோத்தி யெம் அரசே. 57

---

⊗ 8கூட்டம் அந்தக்கரணம் ஞானேந்திரியம் வாயுக்கள் கர்மேந்திரியம் கர்மம் கர்மம்
அவித்தை பஞ்சபூதங்கள் இதுபுரியட்டகசரீரம்

மாயமாம் உடலில் மறைந்துநீ யிருந்து
வஞ்சகப் புலன்களை யாட்டி
காயமும் உயிரும் கலந்திட வைத்துக்
கருமாம் தளையினைப் பூட்டல்
ஞாயமா இந்த ஞாலத்தில் மயங்கி
நான்படும் பாடுநீ யறிவாய்
ஆய நின் பெருமை அறிகிலா தயர்ந்தாய்
அருயெனக் கயோத்தியெம் அரசே. 58

கொலைபுரி அரக்கர் குலத்தினிற் பிறந்தும்
குறையுணர் விபீடணன் துறந்தான்
தலைவனே யுன்றன் சரணடைந் துய்ந்தான்
தகவிலா நாயினும் கடையேன்
புலையனாய் உலகைத் துறந்திலன் துறந்தார்
போல்நடித் திடுமெனை மாற்றி
அலைவற ஞானம் அகத்துற வடைய
அருளெனக் கயோத்தியெம் அரசே. 59

வாழ்வெனக் காம வசத்தினால் மயங்கி
மறை மொழி யனைத்தையும் மறந்தேன்
ஊழ்வினை வலியோ யுணர்விலாக் குறைவோ
உண்மைபே ரின்பமா யிருந்தும்
ஏழ்பவக் கடலில் இச்சையால் இழுக்க
இன்ப துன்பங்களில் மூழ்கி
ஆழ்ந்திடா முன்னம் ஆள்கரந் தேந்தி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 60

உம்பர்தம் அரசே ஒளியினுக் கொளியே
உணர்வினுக் டுணர்வதாம் பொருளே
பம்பரம் போலப் பாவியேன் ஆடல்
பழவினை யெனினும்நின் செயலே
தம்பெரும் செயலால் தயவினால் மாற்றி
தாயினும் இனியை நீ யிரங்கி
அம்பரம் அடியால் அளந்த எம்பெருமான்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 61

ஆழிசூழ் உலகில் அரக்கனால் வைத்த
அன்னையின் சிறைவிடுத் தாண்டாய்
வாழிநின் பெருமை வள்ளளென் றடைந்தேன்
மதியிலா நாயினேன் பிறந்து
ஊழிதோ றிந்த உடற்சிறை யடைந்தேன்
உணர்வினுல் உய்வதற் கரியேன்
ஆழிபோல் உருண்டிங் கயர்ந்தனன் இரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 62

துணையிலாக் கொடியேன் துன்பமாம் கடலில்
துரும்பெனச் சுழன்றன் ஞானப்
புணையினில் ஏற்றி புன்துயர் மாற்றிப்
பூரணா னந்தமே அளித்தால்
இணையிலாப் புகழால் இகபரம் போற்றும்
இறைவனே மறுப்பவர் உண்டோ
அணையிலாக் கருணை வெள்ளமே யிரங்கி
அருலெனக் கயோத்தியெம் அரசே. 63

ஏகமாம் பிரம்மம் இன்பமாம் அதுவே
என்றும்நீ ஆகுவை எனவே.
ஊகமாய் மறைகள் உண்மையென் றுரைத்தும்
உணர்வுகளோர்க் கநுபவமாக.
பாகமா னவர்க்குப் பவப்பிணி யொழித்தும்
பன்முறை தர்க்கமீ துரைத்தும்
ஆகமே தானென் றலைந்தனன் இரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 64

வாரணம் எட்டும் வந்துபாய் மார்பன்
வளர்கையிலே யேந்திய தோளான்
போரணி தோற்றுப் பூமியில் நிற்கப்
போயின்று நாளைவா என்றுய்
நாரணன் கடவுள் நாமெனும் கருத்தோ
நாதநின் கருணையின் பெருக்கோ
ஆரண முடியில் அமர்ந்திடும் மணியே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 65

தானந்த மில்லாத் தனிப்பரம் பொருளே
        தனியிருந் தறிலார் கயவர்
நானந்தப் பிரம்மம் ஞானத்தால் ஆகேன்
        நாஞெரு சீவனே என்பர்
மோனந்தான் பெற்று முப்பொருள் ஒன்ருய்
        மோகமற் றறிவுருவாகி
ஆனந்த மடைந்தார் அறிஞர்கள் அது போல்
        அருளெனக் கயோத்தியெம் அரசே. 66

மெய்தொரு முள்ளக் கமலமே யிடமாய்
        விளங்கிய விமலனே வந்து
பொய்யிருள் உன்னை ப்போக்குவா னென்றே
        புகன்றுனை யடைந்தனன் இன்று
கைத்திறங் காட்டி கதிருறும் இருள்போல்
        கண்டுநீ யெரிக்குநா ளுளதோ
ஐயனே என்றன் ஆருயிர்த்துணை நீ
        அருளெனக் கயோத்தியெம் அரசே. 67

ஆழ்வார்கள் ஆண்டாள் அன்புளோர் எவரும்
        அடிகள்பெற் றுய்ந்தனர் அந்நாள்
வாழ்வென விடய வஞ்சகப் புலஞல்
        மான் தொடர் கானநீ ரெனவே
ஊழ்வழி பிறந்துண் டுடுத்தி கண்ணுறங்கும்
        உணர்விலா நாயினேன் தனையும்
ஆழ்வையென்ற டைந்தேன் அஞ்சலென் றிரங்கி
        அருளெனக் கயோத்தியெம் அரசே, 68

பாவையர் அல்குற் பாம்பினுல் தீண்டிப்
        பரவிய விடத்திஞல் உடலம்
கோவையாய் வெந்து கூற்றினுக் காளாய்
        குவலயத் தேங்குதல் முறையோ
சேவைசெய் தேத்தித் திருவடி நினைக்கும்
        சீவனுக் கிறுதிநாள் துணைநீ
ஆவையென் றடைந்தேன் ஐயனே யிரங்கி
        அருளெனக் கயோத்தியெம் அரசே. 69

வாழநீ நினைந்து வலிதினில் முயன்று
வல்வினை யானவென் றன்னை
மாழவே செய்ய மதித்தனை யுன்னை
மகாதேவன் காக்கினும் வந்து
வீழவே செய்வேன் என்னுமிவ் வினையை
விரைந்துவந்த ழித்திடா யென்னில்
ஆழிசூழ் உலகில் அரிது நான் வாழ்தல்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 70

மூவரும் அயர்ந்தார் முனிவரும் அயர்ந்தார்
மோகமாய்க் காமவேத னையால்
தேவரும் அயர்ந்தார் சித்தரும் அயர்ந்தார்
தீரரும் சூரரும் அயர்ந்தார்
சீவனய்ப் பிறந்த தீயனேன் அயர்தல்
செப்பவும் வேண்டுமோ இரங்கி
ஆவலை மாற்ருய் அருட்கடல் அன்றோ
அருளெனக் கயோத்தியெம் அரசே. 71

வல்லவா சரணம் வந்தெனை யாள்வாய்
வள்ளளென் றடைந்தனன் இரங்காய்
எல்லையற்றவனே எம்பெருமானே
ஈசனே ஏகநாய கனே
கல்லினுள் தேரை கருவினுள் முட்டை
காத்தருள் புரிபவன் அன்றோ
அல்லல்தீர்த் தெனையும் அங்கையால் ஏந்தி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 72

அறிந்தவர்க் குலகா னந்தமாம் அறியார்க்
களவிலாத் துன்பமே யாகும்
செறிந்திரு ளாகும் கண்ணிலார்க் கருணன்
செங்கணர்க் கொளிதாம் அதுபோல்
தெறிந்திருள் நீக்கிச் சிவமுயிர் ஒன்ருய்
தெளிந்துணர்ந்தான்மமெய் யுணர்வால்
அறிந்தெனை ஞான அவிசினில் ஏற்றி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 73

எண்ணுமிக் கொடிய மனத்திஞே டுற்று
என்முழு வலியெலாம் இளந்தேன்
பண்ணுதற் குபாயம் பாறிலே காணேன்
பாவியேன் படுதுயர் அறிந்தும்
கண்ணினுக் கிமைபோல் காத்திடுங் கடவுள்
கைவிடல் ஞாயமோ வென்று
அண்ணலே யுலகம் அயர்ந்திடா முன்னம்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 74

காணுமிவ் வுலகம் கண்மயக் காகும்
காலமூன் றவையினும் இலேயாம்
பேணுமெய் யுணர்வால் பேதையர் உணரூர்
பேதமுப் பொருளென அயர்வார்
பூணுமிப் பந்தம் பொய்யெனப் போக்கி
பூரண னந்தமே விளக்கி
ஆணும்பெண் அலியும் அல்ல னெம்பெருமான்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 75

மின்னிடை மடவார் மேல்வைத்த காம
விருப்பினே நூறுபங் காக்கி
உன்னிடத் தொருகூர் உண்மையாய் வைக்கும்
உணர்விலா நாயினேன் தன்னே
இன்னருள் சுரந்தே எம்பிரான் இரங்கி
யேழையைக் காத்திடா யென்னில்
அன்னியர் தம்மை யடைந்திலன் கண்டாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 76

கதிபெரி தென்றுன் கழலினே யடைந்து
கருதுவார்க்கிரங்கிநீ வந்து
மதிபெரி தாக்கி மார்க்கண்டனேப் போல்
வாழ்வுமெய் யின்பவீட ளிப்பாய்
விதிபெரி தென்றே விட்டிடா தெனேயும்
விரும்புநீ அருளினல் ஆண்டால்
அதிபன்நீ மறுக்க யாருளார் உலகில்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 77

கேட்டவை யனைத்தும் கிருபையோ டளிக்கும்
கேடிலா ஈசனீ யிருக்க
வாட்டமுற் றுலகம் மயங்குவ துன்னை
வள்ளளென் றறிந்திடா வகையோ
நாட்டமுற் றுணர்வாய் நானது வாகி
ஞானமெய் யின்பமா யிருக்க
ஆட்டிடும் வினையை அழித்து மேல்வீடு
அருளெனக் கயோத்தியெம் அரசே. 78

உச்சியம் பொழுதில் உடற்பசி தணிக்க
ஊர்வலம் வந்துநற் றவத்தோர்
நச்சிடாதாங்கு நற்பசி தணித்து
நற்றவம் இளைத்துவீ டடைந்தார்
மெச்சுநல் விரக்தி மேவிலன் கண்டாய்
மெய்த்தவம் இயற்றிநான் அறியேன்
அச்சுதா அமலா அனாதியான் தீனன்.
அருளெனக் கயோத்தியெம் அரசே. 79

திருமறை யின்னும் தேடியும் காணாச்
சேவடி தூதுபோ யிருக்க
குருடன்றன் மகனே குணத்தினற் குருடாய்
குழிபறித் தழித்திட நினைத்தான்
பெருமநீ அண்டம் பெயர்ந்திட நிமிர்ந்தும்
பேதையர் அறியுமா றுளதோ
அருளினல் அன்றி அறிவது முண்டோ
அருளெனக் கயோத்தியெம் அரசே. 80

முடியுடை யரசர் மூவுல காண்டும்
முடிவினிற் சாம்பலா வதுவே.
படியிலா தழிந்த பாழ்கிண றொக்கும்
பாருல கிதனைப்பொய் யாக்கி
குடியிருந் தென்னுள் குறையெலாம் நீக்கி
கூற்றொழித் தின்பவீ டளிப்பாய்
அடிகளை யடைந்தேன் அடியனுக் கிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 81

உயர்வென வுடலை யோம்புதல் உறித்தாய்
ஊழ்வினை வசதத்தென் றுணரேன்
கயவர்பாற் சென்றுக் காமவே ளெனவும்
கற்பக மெனவுநான் புகழ்ந்துன்
செயலறி யாது தீயனேன் திரிந்தேன்
திருவருள் புரிந்தெனை நோக்கி
அயர்வெலாம் நீக்கி யாள்வையென் றடைந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 82

வாழுமோர் அரசாய் வையமாண் டிடினும்
வறுமையாற் பிணியடைந்திடினும்
பாலுறும் காம பாணமைந் துற்றுப்
பாவையர் மோக முற்றிடிடினும்
எழுசா கரங்கள் எழுந்து சீறிடினும்
என்மனம் இணையடி மறவாது
ஆழுமோர் திறனை அடியனுக்கிரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 83

வாழ்வுநீ வையகம் அறிய
வாழ்வித்த வள்ளல்நீ யன்றோ
கூழ்குடித் தயர்ந்து குடிசையில் வாழ்ந்தக்
குணமிலா நாயினேன் தனையும்
பாழ்மனத் துடன்நான் பற்றிடா துலகில்
பவர்புகழ்ந்திகழினும் அசையா
ஆழ்கடல் அதுபோல் அசைவிலா திருக்க
அருளெனக் கயோத்தியெம் அரசே. 84

முப்பதும் ஆறும் தத்துவம் அதனில்
முக்குணப் பகுதியால் தோன்றும்
இப்பியல் வெள்ளி யிருத்தல்போல் உலகும்
இறைவனும் சீவரும் ஐயேழ்
பொய்ப் பொருளாகப் போதமே வடிவாம்
பூரணப் பிரம்ம மேயுண்மை
அப்பொளிள் தானய் அறிந்தினி திருக்க
அருளெனக் கயோத்தியெம் அரசே. 85

கன்றினுல் விளவின் கனியெரிந் தந்நாள்
காரிகையார்கள் தந் துகிலே
சென்றுநீ யெடுத்துச் செழுங்குறுந் தேறும்
செல்வமே யேழ்பிறப் பாற்றில்
நின்றுவெம் துயரால் நிலையிழந் தயர்ந்தேன்
நீள்கரந் தேந்திவந் தெடுப்பாய்
அன்றெனில் உலகில் அரிதுநான் வாழ்தல்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 86

மதியினுல் விதியை வெல்லுவர் உன்றன்
மலரடி போற்று வார்க் கென்றல்
துதியெனல் ஆச்சோ துணையிலா நாயேன்
துறையறிந் துய்ந்திலன் மாயை
விதிவழி யாட்டி வித்தையை க்காட்டி
வேதனைப் பிறப்பிறப் பாழ்த்தும்
அதிகநான் சொல்லஅறிந்திடா துண்டோ
அருளெனக் கயோத்தியெம் அரசே. 87

எள்ளுறும் இடமும் பிறிவிலாப்பொருளே
இறைவனே இருவினைப் பயனை
உள்ளவா றறிந்தே உயிர்க்கெலாம் ஊட்டும்
ஒரு பெருந்தலைவன்நீ யிருக்க
கள்ளமேன் மனத்தில் கலந்ததோ அறியேன்
காக்குமுன் கருணையின் பெருக்கால்
அள்ளிநீ வினையை அடியொடும் வீசி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 88

பெருந்திறல் மாயைப் பேரிருள் மூடப்
பிரம்மமே சீவனுய் மனமாய்த்
திருந்திய வுலகாய்த் திகழ்வதால் பேதம்
செய்வதற் கெங்குள தறிவே
இருந்ததை யறியார் இறப்பொடு பிறப்பாய்
இன்பதுன் பங்களில் மூழ்கி
அருந்துயர் அளிக்கும் அவித்தை னயமாய்த்தே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 89

மன்னவர் கோடி மகபதி கோடி
மலரவர் கோடியாய் மாண்டார்
இன்னலார் உலகில் இன்பமே யில்லை
எனதுடல் இது வது என்ன
பின்னலாய் பாசம் பிணித்திட அயர்ந்தேன்
பேதமை அழித்துமெய் யுணர்வால்
அன்னம்பால் நீரைப் பிரித்தல்போல் பிரித்தே
அருளெனக் கயோத்தியெம் அரசே. 90

தழைத்திடப் பாசக் கயிற்றினைக் காட்டி
தயவிலா தெமன்வரும் காலம்
இழைத்திடா தென்முன் இன்னருள் சுரந்துன்
எழில்கரத் தம்புவில் லேந்திப்
பிழைத்திட வந்துப் பேதமை மாற்றிப்
பேரின்ப வீடளித்தாள் வாய்
அழைத்திடேன் அந்நாள் அயர்விலா திரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 91

தெய்வநா னென்ற இரணிய னுடலைச்
சீயமாய்ப் பிளந்தவன் மதலை
கைகுவித் தேத்தக் கழலினை தந்து
கருணையால் இன்பவீ டளித்தாய்
உய்வதற் கெண்ணில் உன்பத மல்லால்
உயிர்க் கொரு வுறுதிவே றுண்டோ
ஐவகைப் புலன்கட் கஞ்சிவந் தடைந்தேல்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 92

காற்றிலை புசித்தென் கானகம் திரிந்தென்
கனலிடைக் கடுந்தவம் புரிந்தென்
ஊற்றெழும் கண்ணீர் உளம் நெகிழ்ந்தொழுக
உடல்மறந் துயிர்மறந் திருப்பார்
கூற்றொழித் தின்பம் குறைவிலா வீடும்
கூட்டுவாய் இருவினைத் துயரை
ஆற்றிலேன் இறைவா ஆள்வையென்ற டைந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 93

துருவாசர்க் கஞ்சித் துரோபதை யழைக்கத்
துய்த்திடல் நீக்கிவந் தாண்டாய்
பொருகளம் நடுவில் போற்றிட விசயன்
பொழிந்தனே கீதைமா மழையை
குருவினுக் கிறந்த குழந்தைகள் அளித்தாய்
கொன்றுநீ மாமனைத் தந்தைக்கு
அருளினுல் விலங்கை அறுத்தினி தாண்டாய்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 94

வேழுடல் எரித்த விமலலே தலையில்
வீதிதோறி றந்துண்பா னென்பர்
நாளுமிவ் வுடலை நால்வர்கொண் டெரித்தல்
நாடியும் வாழ்வுயென் அயர்ந்தேன்
மாளுமித் துயரோ மனம்பொறி புலன்கள்
மயங்கிட வாயுரை யரிதே
அளுவை யென்றே அடைக்கலம் புகுந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 95

பிறந்தவன் இறப்பான் பேதமை வயத்தால்
பேரின்பம் அடைவதற் கெண்ணி
துறந்தவன் உலகைத் துரும்பென நீக்கிச்
சூரனுய் ஐம்புலன் அடக்கி
மறந்தவன் உடலை மதியினுல் வினையை
மாற்றிமெய் யுணர்வினுல் வீடும்
அறந்தவம் அடைந்தான் அறிவிலேன் உய்ய
அருளெனக் கயோத்தியெம் அரசே. 96

ஒருகணம் கோவில் உருவினில் இருப்பாய்
உயர்நீதி அரசர்தம் சபையில்
இருகணம் இருப்பாய் எழின்மறை யவர்பால்
எய்திடும் அம்புவீ ழளவே
வருகணம் அனைத்தும் வாழ்வது யோகி
மனந்தனில் மகிழ்ந்துறங் குவயோ
அருங்கனின் இமையென் பாலிருந் தெனக்கும்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 97

தெரிந்ததை யெல்லாம் செய்துபார்த் தயர்ந்தேன்
திருவுளம் இரங்கிலே யென்னே
திரிந்தனன் உலகில் செய்வதை யறியேன்
திருவடி நிழலடைந் திடநான்
புரிந்திட வைத்தால் புன்பிறப் பொழிந்து
போதமெய் ஞானத்தால் வாழ
அருந்துணி யாவாய் ஆனதால் இரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 98

ஈசனே யுன்றன் இணையடி சேர்ந்துன்
இன்பமுற்றிருக்கயான் எண்ணி
நேசம் வைத் துன்னை நினைவர நினைந்து
நித்தியா னந்தமா யிருக்க
வாசனை மனத்தில் வந்தெனை யிழுத்து
வஞ்சகப் புலன்களை யாட்ட
ஆசையற்றிருக்க அறிகிலேன் இரங்கி
அருளெனக் கயோத்தியெம் அரசே. 99

நமன்துயர் மாற்றி நாரணா வுன்றன்
நாமமே புகன்று நைந் துருகி
தமரென அடியார் தாளடைந் தேத்திச்
சந்ததம் ஞானமெய் அரசாய்
கமலமேற் செல்வி கருணையால் நோக்கிக்
காத்தருள் புரியுமா றருள்வாய்
அமலனே மறவா தாள்வையென் றடைந்தேன்
அருளெனக் கயோத்தியெம் அரசே. 100

---

## அயோத்தி மாலை சம்பூரணம்

### பயன் கூறல்

அருளினால் அயோத்தி மாலை
    அடிகளில் அணியப் பெற்றேன்
மருளிலா நூறு பாடல்
    மனத்தினால் மகிழ்ந்து போற்ற
பொருளெல்லாம் வந்து சேரும்
    பூரண இன்பம் துய்ப்பர்
இருளிலா வீடு சேர்வார்
    ஈசன்றன் அருளினாலே.




---